# ஸ்ரீ ராமாநுஜன் 155, 156.

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் **13** | **25—12—1961**<br>பிலவ-ஹு மார்கழி-மீ | ஸஞ்சிகை **11, 12.** |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி — 45

எங்ஙனே நீர்முனிவ தென்னையினி நம்பியழகு*
இங்ஙனே தோன்றுகின்ற தென்முன்னே*—அங்ஙன்
உருவெளிப் பாடா வுரைத்த தமிழ்மாறன்*
கருதுமவர்க் கின்பக் கடல்.

| | |
|---|---|
| நீர் | தோழியரும் தாய்மாருமான நீங்கள் |
| இனி என்னை எங்ஙனே முனிவது | இனி என்னைச் சீறலாகுமோ? |
| நம்பி அழகு | திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகானது |
| என் முன்னே | என் கண்ணெதிரில் |

| | |
|---|---|
| இங்ஙனே தோன்றுகின்றது அங்ஙன் | இதோ ப்ரத்யக்ஷமாய்த் தோன்றாநின்றதே!; என்று |
| உரு வெளிப்பாடு ஆ | உருவெளிப்பாடென்னும் பரிசிலே |
| உரைத்த | அருளிச் செய்த |
| தமிழ் மாறன் | த்ராவிட வேத ப்ரவர்த்தகரான நம்மாழ்வார் |
| கருதுமவர்க்கு | தம்மைச் சிந்திப்பவர்களுக்கு |
| இன்பம் கடல் | ஆனந்த ஸாகரமாயிருப்பர். |

* * * திருக்குறுங்குடி நம்பியின் திவ்யாவயவஸௌந்தர்யம், திவ்யாபரண ஸௌந்தர்யம், திவ்யாயுத ஸௌந்தர்யம் ஆகிய அழகுகளிலே நெஞ்சு பறியுண்ட ஆழ்வார் அநவரதமும் அவற்றையே வாய்வெருவா நிற்க, அதுகண்ட தாய்மார் சீறி சிக்ஷிக்கப் புக, 'நான் நீங்கள் சிக்ஷிக்குமளவிலே நிற்கின்றேனில்லையே, உருவெளிப்பாட்டாலே நம்பியின் அழகு என் முன்னே வந்து தோன்றாநின்றதே!, இனி என்னை நீங்கள் பகவத் விஷயத்தில் நின்றும் மீட்கப் பார்ப்பது பயனற்றதேயாகும் என்று தெரிவித்தமை* எங்ஙனேயோ திருவாய்மொழியின் ப்ரமேயம். இத்திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு இன்பமும் துன்பமும் கலந்து உண்டாயிற்று. அப்படிப்பட்ட ஆழ்வாரைச் சிந்திப்பவர்களுக்கோவென்னில், ஒருநாளும் துன்பமுண்டாக ப்ரஸக்தியில்லை, இன்பமேயாகும் என்றும் ஸூசிப்பித்தருளினாராயிற்று.

கீழ்த்திருவாய்மொழியான * ஊரெல்லாந்துஞ்சியில் ஆழ்வார் இருளுக்கும் பனிக்கும் வருந்தினபடி சொல்லிற்று. இதுதான் இருள் தருமா ஞாலமாகையாலே தமோகுணம் மேலிட்டு நலிந்தபடியைச் சொன்னதாக ஸ்வாபதேசப் பொருள்கொள்ளலாம். ஆளவந்தார் ஸ்தோத்ரரத்நத்தில் * அவிவேககநாந்ததிங்முகே பஹுதா ஸந்தத து:க்கவர்ஷிணி, பகவந் பவதுர்திநே * என்றருளிச் செய்ததும் கீழ்த்திருவாய் மொழியின் ஸ்வாபதேசார்த்தரூபம் என்றும் கொள்ளலாம்.

இருட்போது கழிந்து பகற்போது காண்கிறுப்போலே தமோ குணத்தின் மேலீடு கழிந்து ஸத்வகுணத்தின் தலையெடுப்பு காணத்தொடங்கிற்று. அதனால் நெஞ்சு தரிப்புற்றுத் திருக்குறுங்குடி யெம்பெருமானுடைய வடிவழகையும் திவ்யாயுத திவ்யாபரணச் சேர்த்தியழகையும் வாய்வெருவும்படியாயிற்று.

உருவெளிப்பாடு என்பதொன்றுண்டு; அதாவது மானஸ ஸாக்ஷாத்காரம். கண்ணுக்கு ப்ரத்யக்ஷமாகத் தோற்றுமே நெஞ்சுக்கு ஸாக்ஷாத்கார விஷயமாகை. அது இத் திருவாய்மொழியில் செல்லாநின்றது. இது பிராட்டி நிலைமையிலே நின்று பேசின திருவாய்மொழி. தாய்மார் தலைமகட்கு அடைவுசொல்லி மீட்கப் பார்க்க, தலைமகள் 'எனக்கோ நீங்கள் அடைவு சொல்லுவது? திருக்குறுங்குடி நம்பியின் வடிவழகிலே நெஞ்சு பறியுண்டு கிடக்குமென்னை நீங்கள் அடக்கப்பார்ப்பது முறையல்ல' என்று சொல்லுகிறபடியாமிது. (45.)

## பாசுரம் — நாற்பத்தாறு.

கடன்ஞாலத் தீசனைமுன் காணமல் நொந்தே*
உடனா வனுகரிக்க லுற்று*—திடமாக
வாய்ந்தவனாய்த் தான்பேசும் மாற னுரையதனை*
ஆய்ந்துரைப்பா ராட் செயநோற் றார். (46.)

| | | | |
|---|---|---|---|
| கடல் ஞாலத்து | கடல் சூழ்ந்த நிலவுலகத்தில் | அவன் ஆய் தான் பேசும் | அவனாகவே தாம் அனுகரித்துப் பேசின |
| ஈசனை | எம்பெருமானை | மாறன் | ஆழ்வாருடைய |
| முன் காணமல் | கண்முன்னே காணப்பெறுமல் | உரை அதனை | ஸ்ரீஸூக்திகளை |
| நொந்து | கிலேசப்பட்டு | ஆய்ந்து உரைப்பார் | வைபவமறிந்து அநுஸந்திப்பவர்கள் |
| உடன் ஆ அனுகரிக்கல் உற்று | அவனைத் தாம் அனுகரித்துத் தரிக்கப் பார்த்து | ஆள் செய | ஆழ்வார்க்கு அடிமை செய்ய |
| திடம் ஆக வாய்ந்து | திண்ணிய அத்யவஸாயம் கொண்டவராய் | நோற்றார் | நோன்பு நோற்றவராவர்கள். |

* * * கீழ் *எங்ஙனேயோ வென்னும் திருவாய்மொழியில் உருவெளிப்பாடாய்ச் சென்றதித்தனை போக்கி ஸாக்ஷாத்தாகக் காணப் பெற்றதில்லையே; அதனால் ஆழ்வார்க்கு க்லேசம் மிக்கதாயிற்று; அந்த க்லேசத்தை எவ்வழியாலே போக்கிக் கொள்ளலாமென்று பார்த்த ஆழ்வார் 'அனுகரித்துத் தரித்தல் என்று ஒன்றுண்டு' என்று திருவுள்ளம்பற்றி அப்படியே தத்பாவ பாவனை கொண்டு பேசினாராயிற்று *கடல் ஞாலத்தில். அப்படிப்பட்ட ஆழ்வாருடைய அருளிச் செயல்களைத் தாமறிந்து ஓதவல்லவர்கள் யாவரோ அவர்கள் ஆழ்வார்க்கு நித்யகைங்கரியம் பண்ண நோன்பு நோற்றவர்களெனக் கொள்ளத்தகுவர் என்றதாயிற்று.

பிரிந்து வருந்துங்காலத்திலே 'அநுகரித்துத் தரித்தல்' என்று ஒரு முறையுண்டு? அதாவது, எம்பெருமான் தானாகவே தன்னை யநுகரித்துப் பேசி இங்ஙனேயொரு போது போக்காலே தரித்திருக்கையாம். திருவாய்ப்பாடியில் திருக்குரவை கோத்தவன்று ப்ரீதிரஸம் தலைமண்டை கொண்டு செல்ல, அது ஸாத்மிக்கைக்காகக் கண்ணபிரான் பிரிந்து தன்னை மறைத்திட, அப்போது திருவாய்ப் பாடியிற் பெண்களெல்லாரும் அநுகரித்துத் தரித்தார்களென்னுமிடம் ஸ்ரீ விஷ்ணுபுராண ப்ரஸித்தம். அதில் (5—13—23)

"க்ருஷ்ணே நிபத்தஹ்ருதயா இதமூசு: பரஸ்பரம்
க்ருஷ்ணோஹமேஷ லலிதம் வ்ரஜாம்யாலோக்யதாம் கதி:
அந்யாப்ரவீதி க்ருஷ்ணஸ்ய மம கீதிர் நிசம்யதாம்
துஷ்ட காளிய திஷ்டாத்ர க்ருஷ்ணோ ஹமிதி சாபரா"

"பாஹுமாஸ்போட்ய க்ருஷ்ணஸ்ய லீலா ஸர்வஸ்வமாததே
அந்யா ப்ரவீதி ஹேகோபா: நிச்சங்கை: ஸ்தீயதாமிஹ
அலம் வ்ருஷ்டிபயேநாத்ர த்ருதோ கோவர்த்தநோ மயா
தேநுகோயம் மயாக்ஷிப்தோ விசரந்து யதேச்சயா"

என்றிவை முதலான சுலோகங்கள் காண்க. (இந்த சுலோகங்களின் கருத்தாவது—) கண்ணபிரான் பிரிந்து சென்ற காலத்தில் கோபிகள் விருந்தாவனத்தில் திரள் திரளாகக் கூடி ஒருவர்க் கொருவர் இங்ஙனே பேசிக்கொண்டார்கள்; நான் கண்ணன், இதோ அழகாக நடை நடக்கிறேன் பார் என்றாள் ஒருத்தி; நான் கண்ணன், செவிக்கினிதாகக் குழலூதுகின்றேன் கேள் என்றாள் மற்றொருத்தி; நான் கண்ணன், கொடிய காளியநாகமே! நில் என்றாள் இன்னொருத்தி. தோளைத் தட்டிக்கொண்டு கண்ணபிரான் செய்யும் லீலைகளை யெல்லாஞ் செய்தாள் வேறொருத்தி. கோபாலர்களே! நீங்கள் மழைக்கு அஞ்சாதே நில்லுங்கள், இதோ நான் கோவர்த்தனமென்னுங் கொற்றக் குடையைத் தூக்கிவிட்டேன் பாருங்களென்றாள் ஒருத்தி. தேனுகாசுரனை இதோ நான் மாய்த்துவிட்டேனுகையால் இனி மாடுகளெல்லாம் நிர்ப்பயமாக உலாவலா மென்றாள் ஒருத்தி—என்கை.

அங்ஙனே அநுகரித்துத் தரிக்கும் விதம் ஆண்டாள் பக்கலிலுங் கண்டதொன்றாகும். நோன்பு நோற்பதாகக் கொண்டு திருப்பாவை பாடியது ஆய்ச்சியர்களின் அனுட்டானத்தை அநுகரித்த படியத்தனையிறே. இத்தகைய அநுகார ப்ரகாரங்கள் உபநிஷத்துக்களிலும் காண்பனவாகும். ஆழ்வார்க்கு அந்த அநுகார ப்ரகாரமே இத்திருவாய்மொழியில் செல்லா நின்றது. அதுதானும் தாய்பாசுரத்தாலே வெளிவருகின்றது. மகளின் அநுகாரத்தைத் தாய் முறையிடுகின்றாளென்க.

பராங்குச நாயகியானவள் ஜ்ஞான முத்திரையுந் தானுமாய் கீதாசார்யனைப் போலே யிருந்துகொண்டு "கடல் ஞாலஞ் செய்தேனும் யானே, கடல்ஞால மாவேனும் யானே, மலையெடுத்தேனும் யானே, இனத்தேவர் தலைவனும யானே" என்றாற் போலே பாசுரங்களைச் சொல்லிக்கொண்டிருக்க கண்ட திருத்தாயார் 'இது என்ன நிலைமை!' என்று ஆராயத் தொடங்கினள், 'எம்பெருமானைப் பிரிகையாலுண்டான ஆற்றாமையினாலே அநுகரித்துத் தரிக்கின்றாள்' என்று அறியமாட்டாதவளாய்க் கலங்கிக் கிடந்தாள்; அப்போது சில பந்துவர்க்கங்கள் அங்கேவந்து சேர்ந்து, இது என்னென்று வினவ, ஸர்வேச்வரன் இவள் பக்கலிலே ஆவேசித்தான்போலே யிருக்கிறது' என்று விடை கூறுகிறபடியாய் இத் திருவாய்மொழி சென்றது. அதை ஸாரமாக வெடுத்துரைத்தது இந்த வெண்பா. .·. (*)

## அன்பர்களுக்கு அறிவிப்பு.

இந்த ஸஞ்சிகையோடு ஸ்ரீராமாநுஜன் பதின்மூன்றுவது ஸம்புடம் முடிவுபெற்றது. இனி அடுத்தமாதத்தில் பதினான்காவது ஸம்புடம் தொடக்கமாகும். 1961க்கு சந்தாபாக்கியுள்ளவர்

கள் உடனே அனுப்பிவைப்பது. 1959, 1960 வருஷங்களுக்கும் பாக்கி செலுத்த வேண்டிய வர்கள் பலருளர்; அவர்களுக்கு நாம் தனிப்பட தெரிவிக்கவேண்டியதொன்றுமில்லை.

இப்படிக்கு,
மானேஜர், " ஸ்ரீராமாநுஜன்."

---

# ஸ்ரீ காஞ்சீபுரியின் தௌர்ப்பாக்யம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்வஸ்தி ப்லவாப்தே மதுரவதி திவஸே வ்ருஶ்சிகம் க்ருஷ்ணபக்ஷை-
காதஶ்யாம் வைஷ்ணவ்யாம் ஸவிதுரஹநி தே வாஸரே திக்3மபா4நோ:
ஸ்ரீமத்3ராமாநுஜார்யாஹ்வயயதிவர திவ்யஸத்3ப்3ரஹ்மலோகாய-ஸா
ஸேஜே ஸ்ரீரங்கராமாநுஜயதிநிருபதிர்வைஷ்ணவம் திவ்யதா4ம ॥

ஸ்வாமீ யோ நஹாயநோ நாஜ-ஸாஸி க்ருஷ்ணயஶ-திதி-
யோ ஜந்தே தஹஸ்தாரகே ஶிநே ஶஸீஶிநாந்தி நு: ।
ஸூரீஸிரோய தீஸ்வராவ்யயோ ஶிவாஜ்ஞாந்தகோ
ஸந்நீ ஜ ஸம்ஶஶுக்ஷணஸ்வாஶிஹ்வ திதாஜ ஹா ॥

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமியென்று ஸுப்ரஸித்தரான மஹாஸ்வாமி பல ஸம்வத்ஸரங்களாக இந்த திவ்யதேசத்தில் எழுந்தருளியிருந்தது யாவருமறிந்ததே. ஜ்ஞாநாநுஷ்டானங்களில் நிகரற்றவரான இந்த மஹாஸ்வாமி கார்த்திகைமீ 18 ஆம் தேதி (3-12-61) க்ருஷ்ணைகாதசி, ஹஸ்த நக்ஷத்திரம் ஞாயிற்றுக்கிழமையன்று பகல் ஒரு மணிக்கு ஸ்வாச்ரமத்தில் அநாயாஸமாகத் திருநாடலங்கரித்தருளலாயிற்று. எண்பது திருநக்ஷத்திரத்திற்கு ஸந்நிஹிதரான இந்த மஹாஸ்வாமி திருநாடலங்கரித்தது ப்ராப்தகால மெனினும் இவ்விபூதியை இன்னமும் நெடுநாள் அலங்கரித்தெழுந்தருளி யிருக்கவேண்டிய அத்விதீய வ்யக்தி விசேஷம்.

உபநிஷத்பாஷ்யகாரரான ரங்கராமாநுஜஸ்வாமியின் அபராவதாரமேயான இந்த மஹாஸ்வாமி, பரபக்ஷ நிராக்ருதி, ஹேதுஸாம்ராஜ்யம் முதலான அனேக க்ரந்தங்கள் ஸாதித்து விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு மஹோபகாரம் செய்தருளியவர். ஞானமும் அனுட்டானமுமே வடிவெடுத்த இந்த மஹா ஸ்வாமியின் திருவடிகளில் ஆச்ரயித்து உஜ்ஜீவித்தவர்கள் பலர்.

தேவப்பெருமாள் ஸந்நிதியில் அரிஜன ப்ரவேசமானபிறகு இந்த மஹாஸ்வாமி எழுந்தருளியிருந்த நிலை "யாந பஶ்யாமி வைதேஹீம் ஶோகஸாகர வாஸிநீம்" என்று வான்மீகிபகவான் பிராட்டியைப் பற்றிப் பேசியிருந்த வண்ணமாகவேயிருந்தது. ஸ்ரீஸ்வாமியின் பெருமைக்குத்தக்கபடி சரமகைங்கரியம்லோகோத்தரமானமுறையில்நடந்தது.

---

# திருக்கோவலூர் திவ்ய கோஷ்டிகள்.



நடுநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றானதும் தலைமை பெற்றதுமான திருக்கோவலூரில், நிகழும் பிலவஸு ஆனிமாதம் உத்தராட நக்ஷத்திரத்தில் நடைபெற்ற மஹா ஸம்ப்ரோக்ஷண ஸமயத்தில் கூடின திவ்ய கோஷ்டிகளின் காட்சி.



# உபய வேதாந்த மணித்திரள்.

## வடமொழி வேதாந்த மணி

### — விசிஷ்டாத்வைத விளக்கம் —

உலக வழக்கையும் நூல்வழக்கையும் ஒருங்கே உபபந்நமாக்குவது விசிஷ்டாத்வைதமே யாகும். அதனை இந்த வியாஸம் விவரிக்கின்றது காண்மின்.

உலக வழக்காவது லோக வ்யவஹாரம். நூல் வழக்காவது சாஸ்த்ர வ்யவஹாரம். உலக வழக்குத் தான் முதலில் தோன்றியது. பிறகுதான் சாஸ்த்ர வ்யவஹாரம் தோன்றியது. உலகமும் அநாதியாய் சாஸ்த்ரமும் அநாதியாயிருக்கும்போது சாஸ்த்ர வ்யவஹாரம் பிறகு தோன்றியதென்று எங்ஙனே சொல்லலாமென்னில்; நன்னூலில் "இலக்கியங் கண்டதற்கு இலக்கணமியம்பலின்" என்றொரு சூத்திரமுள்ளது. இதனால் இலக்கியம் முற்பட்டதென்றும் இலக்கணம் பிற்பட்டதென்றும் விளங்குகின்றது. ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரஜ்ஞர்களும் கூட லக்ஷியம் முற்பட்டதென்றும் லக்ஷணம் பிற்பட்டதென்றும் கொள்கையுடையராகக் காணப்படுகிறார்கள். உண்மையில், கண்ட லக்ஷ்யங்களை சிக்ஷிப்பதற்காகத் தானே லக்ஷணசாஸ்த்ரம் தோன்றுகின்றது. ஆகவே இந்த முற்பாடு பிற்பாடுகளில் விவாதங்கொள்ள இடமில்லை. ஆனால், லக்ஷண சாஸ்த்ரம் பிற்பட்டதென்பார் அது தோன்றின காலங் கண்டு கூறுகின்றாரல்லர். லக்ஷ்யம் தோன்றினதற்கும் அடி தெரியாது, லக்ஷணம் தோன்றினதற்கும் அடி தெரியாது. ஆயினும் ஒன்று முற்பட்டதென்றும் மற்றொன்று பிற்பட்டதென்றும் சொல்லப்படுகிறது. ஜீவாத்மாவுக்கு பகவத் ஸம்பந்தமும் ப்ரக்ருதி ஸம்பந்தமுமாகிய இரண்டும் அநாதியாயிருக்கச் செய்தேயும், பகவத் ஸம்பந்தந்தான் அநாதி யென்றும் ப்ரக்ருதி ஸம்பந்தம் வந்தேறி யென்றும் கூறப்படுகிறது. இதைப்பற்றி நம் ஆசார்யர்கள் எழுதுகையில்,

"அசித் ஸம்பந்தம் வந்தேறியாய் கர்மோபாதிகமாகையாலே அநித்யமாயிருக்கும். பகவத் ஸம்பந்தம் அநாதியாய் நிருபாதிகமாகையாலே நித்யமாயிருக்கும். ஆனால் வந்தேறியானதை அநாதியென்பானென்னென்னில்; வந்தேறின காலத்துக்கு அடி தெரியாமையாலே அநாதியென்று ப்ரமாணங்கள் சொல்லுகையாலே .... "

என்றருளிச் செய்கிறார்கள். அந்த நியாயம் இங்குங் கொள்ளலாம். ஆக லோக வ்யவஹாரம் முற்பட்டதென்றும்சாஸ்த்ரவ்யவஹாரம் பிற்பட்டதென்றும் கொள்ளக் குறையில்லை.

இனி, லோக வ்யவஹாரங்கள் எப்படியிருக்கின்றன. சாஸ்த்ர வ்யவஹாரங்கள் எப்படியிருக்கின்றன என்பதைப் பற்றிச் சிறிது ஆராய்வோம். சப்தங்களுக்கு ஸப்த விபக்திகள் [ஏழு வேற்றுமைகள்] ஏற்பட்டிருக்கின்றன. நாம் வ்யவஹாரங்கள் செய்யும்போது நமது வாக்குகளில் இந்த விபக்திகள் கலசிக் கலசி வருகின்றன. ஒரே விபக்தியால் நாம் வ்யவ ஹரிப்பதில்லை. வ்யவஹரிக்கவும் முடியாது. பல விபக்திகளைக் கலந்தே நாம் வ்யவஹரிக்க வேண்டியதாகிறது. உதாஹரணமாகப் பார்க்கலாம்—"ஸ்ரீமந்நாராயணன் நம்போன்ற சேதநர்களைப் பரம க்ருபையினாலே ரக்ஷித்தருளும் பொருட்டுத் திருப்பாற் கடலினின்றும் வஸுதேவருடைய புதல்வராய் மதுரையிலே அவதரித்தருளினான்" என்கிறோம். இதில் வரிசையாக ஏழு வேற்றுமைகளும் வந்திருப்பதைக் காணலாம். நம்முடைய எல்லா வ்யவஹாரங்களும் இப்படி ஏழு வேற்றுமைகளையுங் கொண்டேயிருக்கு மென்கிற நியதியில்லை. அதமபக்ஷம் இரண்டு விபக்திகளையாவது கொண்டிருக்கும். 'நான் வந்தேன்' 'நான் போனேன்' என்னும் வியவஹாரங்களில் (நான்) என்கிற முதல் வேற்றுமை யொன்றுதானே காணப்படுகிறது. வேறு வேற்றுமை யில்லையே என்று நினைக்கலாகாது. இன்ன

விடத்திற்கு வந்தேன் ; இன்னவிடத்திற்குப் போனேன் என்றதாகவே தேறுமாதலால் வேறொரு விபக்தியும் சேர்ந்தே யிருப்பதாக அறிக.

'இராமன் யோக்யனே; கண்ணன் கள்வனே' என்று சொல்லுவோமானால், இராமனை நான் யோக்யனாகவே கருதுகின்றேன். கண்ணனை நான் கள்ளனாகவே கருதுகின்றேன். என்றே அந்த வாக்கியங்கள் விரியுமாதலால் அங்கும் பல வேற்றுமைகள் உள்ளனவேயாம். ஆக இவ்வளவும் நாமெழுதியது பெரும்பான்மையைப் பற்ற. ஒரே விபக்தியினால் வ்யவஹாரம் செய்வது தவறன்று, அஸம்பாவித மன்று. அப்படிப்பட்ட விடங்களில் என்ன தாற்பரியம் என்பதைப் பற்றியே நாம் ஆலோசிக்கவேணும். இந்த பிரமசாரி நெருப்புதான், இந்த மாணக்கன் சிங்கக்குட்டிதான், திருவடி தாமரைதான், திருமுகம் சந்திரன் தான்........என்றிப்படி பல்லாயிரம் வ்யவஹாரங்கள் செய்கிறோம். இவ்விடங்களில் கருத்தை ஊன்றி நோக்கவேணும்; பிரமசாரியும் நெருப்பும் ஒன்றாய் விட முடியாது; மாணக்கனும் சிங்கக் குட்டியும் ஒன்றாய்விட முடியாது. திருவடியும் தாமரையும் ஒன்றாய்விட முடியாது. திருமுகமும் சந்திரனும் ஒன்றாய்விட முடியாது. ஆனால் ஒன்றுபோல ஏன் சொல்லுகிறோமென்னில், இரண்டுக்கும் அத்யந்த ஸாம்ய மிருப்பதுபற்றிச் சொல்லுகிறோம்.

'மந்த்ரியே அரசன்' என்றும் சொல்லுகிறோம். மந்திரி அரசனாகமாட்டான். அரசன் மந்திரியாக மாட்டான். பின்னை ஏன் சொல்லுகிறோமென்னில், மந்த்ரி சொன்னபடி யெல்லாம் அரசன் ஆடுகிறான். என்கிற கருத்தைக் கொண்டு சொல்லுகிறோம். இங்கு அத்யந்த விதேயத்வத்தில் நோக்கு. ஆக இவ்வளவும் லோக வ்யவஹாரங்களைப் பற்றிப் பேசினோம்; இனி சாஸ்த்ர வ்யவஹாரங்களிற் செல்வோம்.

சாஸ்த்ர வ்யவஹாரங்களும் லோக வ்யவஹாரங்களைப் போன்றே யிருக்கும். உலக வழக்குகளில் காணும் கருத்தே நூல் வழக்கிலும் காணலாகும். பல வேற்றுமைகளைக் கொண்ட வாக்கியங்களை உலகில் நாம் வ்யவஹரிப்பது போலவே சாஸ்த்ரங்களும் வ்யவஹரிக்கின்றன.

"ஸ ஹி தேவை ருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:.
அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:."

என்கிற வொரு ஸ்ரீராமாயண ச்லோகத்தை யெடுத்துக் கொள்வோம். இதில் ப்ரதமை, த்ருதீயை, ஷஷ்டி, ஸப்தமி ஆகிற நான்கு விபக்திகள் கலந்திருக்கின்றன. உபநிஷத்து முதலிய எந்த சாஸ்த்ரத்திற் சென்றாலும் இங்ஙனே பல விபக்திகள் கொண்ட வாக்ய ராசிகளை நாம் காணலாம். இதைப் பற்றிச் சொல்ல வேண்டிய விஷயம் அதிகமாக ஒன்றுமில்லை. ஒரே விபக்தி கொண்ட வாக்கியங்களும் சாஸ்த்ரங்களிற் பல காணப்படுகின்றன. "ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ் தது சந்த்ரமா:" என்கிற வோர் உபநிஷத் வாக்யத்தை யெடுத்துக் கொள்வோம். அந்த ப்ரஹ்மந்தான் அக்நி, அந்த ப்ரஹ்மந்தான் வாயு; அந்த ப்ரஹ்மந்தான் ஸூர்யன்; அந்த ப்ரஹ்மந்தான் சந்திரன் என்று இந்த வாக்கியத்தினால் சொல்லப்படுவதாக அறிகிறோம். ப்ரஹ்மத்திற் காட்டிலும் அக்நி வேறு, வாயு வேறு, ஸூர்யன் வேறு, சந்திரன் வேறு என்பதை நாம் ச்ருதிகளைக் கொண்டே நன்கு அறிகிறோம். *ததேவாக்நிஸ் தத் வாயு:* என்றோதின உபநிஷத்திலேயே "பீஷாஸ்மாத் வாத: பவதே, பீஷோதேதி ஸூர்ய:. பீஷாஸ்மாதக்நிச் சேந்த்ரச் ச." இத்யாதி வாக்கியங்களையும் காண்கிறோம். பரம புருஷனுடைய கட்டளைக்கு உட்பட்டு அவனுக்கு அஞ்சி நடுங்கி வாயு தேவதை வீசுவதாகவும் ஸூர்யன் உதிப்பதாகவும்....இதில் வ்யக்தமாகச் சொல்லுகிறது. இப்படி பகவானுக்கு அஞ்சி நடுங்கிப் பணிவிடை செய்கிற கீழ்ப்பட்ட தேவதைகள் பகவான் தானேயாக இருக்கமுடியுமோ? இது சிறிதேனும் ஸம்பாவிதமோ? ஒருகாலும் இருக்கமுடியாது. உண்மை இப்படியிருக்க, யதார்த்தவாதி

யான உபநிஷத்து *ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ் தது சந்த்ரமா:* என்றும் *இந்த்ரச் ச நாராயண: சந்த்ரச் ச நாராயண:* என்றும் ஏன் சொல்லுகிற தென்று ஆராயவேணும். இதை நாம் நம்முடைய அல்ப புத்தியைக் கொண்டு ஆராய வேண்டா. வேதமே ஆராய்ந்து தெளிவு பிறப்பித்திருக்கின்றது. "நாராயண ஏவேதம் ஸர்வம். யத் பூதம் யச்ச பவ்யம்." என்பதாக ஓர் உபநிஷத் வாக்கியம் ப்ரஸித்தமாக வுள்ளது. 'எல்லாப் பொருள்களும் நாராயணனே' எனப்படுகிறது இதனால். இப்படிச் சொல்லுவதன் காரணத்தையும் அவ்விடத்திலேயே "அந்தர் பஹிச் ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:" என்கிற வாக்யம் நன்கு விசதப் படுத்திவிட்டது. ஒவ்வொரு பொருளிலும் பரம புருஷன் வியாபித்திருப்பதனால இந்த வ்யாப்யவ்யாபக பாவ ஸம்பந்தமடியாகவே அபேதம் சொல்லப்படுகிறதென்று தெளிவித்தபடி.

பரப்ரஹ்ம மொன்று தவிர வேறு பதார்த்தம் உண்மையில் எதுவுமே கிடையா தென்று கூறுகின்றவர்கள் அபேதத்தைச் சொல்லுகின்ற வேதவாக்யங்களை மாத் திரமே கண்டு அத்வைத கோலாஹலங்களை அபரிமிதமாகச் செய்கின்றார்கள். லோக வ்யவஹார ரீதியில் தான் சாஸ்த்ர வ்யவஹாரங்களு முள்ளன வென்பதை நன்றாக நெஞ்சிற் கொண்டு நோக்குமளவில் விசிஷ்டாத்வைதக் கொள்கைதான் பரிபூர்ண மான ஆதாரமுடையதென்று விளங்கும்.

மற்றொரு சிறு விஷயமும் கேண்மின்; "ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி." என்றொரு வாக்யத்தைப் பற்றிக் கொண்டு ப்ரஹ்மத்தோடு ஐக்யமாய் விடுவதே மோக்ஷமென்கிறார்கள். ஐக்யமாவதே மோக்ஷமாகாது. "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி." என்று சாந்தோக்யோபநிஷத்தில் [பரமம் ஸாம்ய முபைதி என்று] சொல்லியிருக்கிறதே, ஸாம்ய மென்றால் என்ன? முகம் சந்திரனோடு ஸாம்யமுடையது என்றால் முகமென்கிற வஸ்து வேறாயும் சந்திரனென் கிற வஸ்து அதனில் வேறாயுமிருந்தாலொழிய ஸாம்யம் நிர்வஹிக்க முடியாதன்றோ; "தத்பிந்நத்வே ஸதி தத்கத பூயோ தர்ம வத்த்வம் ஸாம்யம்" என்றுதானே ஆலங் காரிகர்கள் ஸாம்யலக்ஷணம் சொல்லுகிறார்கள்; பரப்ரஹ்மம் வேறாயும் முக்த புருஷன் வேறாயுமிருந்தாலொழிய "ஸாம்யமுபைதி" என்றது சேராதே - இத்யாதிகளைச் சிறிதும் ஆலோசியாமல் ப்ரஹ்மாத்வைத வாதம் செய்கிறார்கள். "மாணவக: அக்நிரேவ பவதி" என்றால் என்ன அர்த்தமோ அதுதான் (ப்ரஹ்மைவ பவதி) என்பதற்கு மாகும் என்றறிவதற்கு சிரமமொன்றுமில்லை.

தைத்திரீய ஸம்ஹிதை இரண்டாவது காண்டம் முதல் ப்ரச்நத்தில் "விஷ்ணு ரேவ பூத்வா இமாங் லோகாங் அபிஜயதி." என்றொரு வாக்யமுள்ளது. இது மோக்ஷ ப்ரகரணமன்று. இங்கு ஏவகாரம் இவகாரஸ்தானே வந்திருக்கிறதென்பதை வேத பாஷ்யகாரர்களும் அறிந்திருக்கின்றார்கள். *ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி* என்ற விடத்துள்ள ஏவகாரமும் இதுபோன்றதே யென்பதை யறிவதற்கு அசக்தர் களல்லர். ஆளவந்தாரருளிச் செய்த "அபிநிவேச வசீக்ருத சேதஸாம் பஹு விதாமபி ஸம்பவதி ப்ரம:" என்கிற ச்லோகரத்நமே ஸுப்ரதிஷ்டிதமாகிறதென்று நிற்கிறோம். .... .... .... .... .... .... *

## 5. தமிழ் வேதாந்தமணி

## "கத்திரபந்து மன்றே பராங்கதி கண்டுகொண்டான்"

தொண்டரடிப் பொடியாழ்வாரருளிச் செய்த திருமாலைக்கு உலகறிந்த ஒரு பெருமையுண்டு; "திருமாலை யறியாதவன் பெருமாளை யறியான்" என்ற பழமொழி உலகமெல்லாம் பரவியிருக்கின்றது. எவனுக்குத் திருமாலை தெரியாதோ அவனுக்குப்

பெருமாளே தெரியாது என்று சொல்லும்போது திருமாலைக்கு மிகச் சிறந்த பெருமை இருந்து தீரவேண்டும். இதிலுள்ள பாசுரம் ஒவ்வொன்றும் தேன்பெருக்காகக் காணப்படுவது ஒவ்வொருவருமறிந்ததே. பாசுரத்தை யநுஸந்திக்கும் போதே எம் பெருமான் நம்முடைய உள்ளங்கையில் வந்து நிற்பதாகவே நினைக்க நேர்கின்றது. கல்நெஞ்சனான நாஸ்திகனும் இதில் சில பாசுரங்களைக் கேட்டவாறே நாஸ்திக்யம் நீங்கி ஆஸ்திகனாகப் பெறுவன் என்று திண்ணமாக எண்ண அவகாசமுள்ளது.

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த திருமாலையில் நான்காவது பாசுரம்—"மொய்த்த வல்வினையுள் நின்று மூன்றெழுத்துடைய பேரால் கத்திரபந்துமன்றே பராங்கதி கண்டு கொண்டான்..........." என்பது. மஹாபாபிஷ்டனான க்ஷத்ரபந்துவு மன்றோ மூவெழுத்துடைய வொரு திருநாமத்தினால் கடைத்தேறினா னென்று அதி சயமாகச் சொல்லப்படுகிறது. க்ஷத்ரபந்துவின் கதை எந்த புராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ள தென்று பலரும் கேட்பதுண்டு; ஸ்ரீவிஷ்ணு தர்மத்தில் தொண்ணூற் றேழாமத்யாயத்தில் பரக்கக் கூறப்பட்டுள்ளது. ஆழ்வார்களுள் இத்தொண்டரடிப் பொடியாழ்வாரொருவரே இக்கதையை ப்ரஸ்தாவித்துள்ளார். வேதாந்த தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் தொடங்கும் போது "பாபிஷ்ட: க்ஷத்ரபந்துச் ச புண்டரீ கச் ச புண்யக்ருத், ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாதாசார்யவாந் பவேத்." என்கிற ச்லோகத்தை யுதாஹரித்துள்ளார்.

அந்த க்ஷத்திரபந்துவின் கதை வருமாறு;— மிகக்கொடிய நடத்தைகளையுடை யனாய் 'பல்வகைப் பாவங்களும் உருவெடுத்து வந்தது' என்னும்படி மஹாபாபியான க்ஷத்திரபந்துவானவன் தனது கொடுமையினால் தாய் தந்தை மக்கள் மித்திரர் அனை வராலும் கைவிடப்பட்டுக் காட்டிலே திரிந்துகொண்டு ஜீவஹிம்ஸை செய்து வயிறு வளர்த்து வந்தவன். இங்ஙனம் நெடுநாள் சென்றவளவில் ஒருநாள் ஒருமாமுனிவர் கொடிய வெயில் வேளையில் வழி போகாநிற்கையில் திகைப்பூண்டை மிதித்தார் போலும்; அதனால் வழிதப்பி இப்பாவிதிரியும் கானகத்திலே புகுந்து இவனது கண்ணுக்கு இலக்காயினர். இவன் அவரைக் கண்டதும் அவருடைய பரிதாப நிலையைக் கண்டு தன்னையுமறியாமல் அம் முனிவர் விஷயத்தில் காருண்ய முண்டாகப் பெற்றனன். கருணையினால், 'மாமுனிவரே! இஃது உம்முடைய வழியன்றே; வழிதப்பி வந்தீர் போலும்; உற்றுநோக்கிப் பாரும்' என்று முனிவரை நோக்கிக் கூற, அவரும் உணர்ந்து, பொறுக்க முடியாத தாஹத்தை யுடையராய் ஒரு தடாகத்தைத் தேடிச் செல்லுகையில் அருகே ஒரு அழகிய பொய்கையைக் கண்டு தாபமிகுதியினால் சடக் கென அக்குளத்திற்போய் விழுந்திட்டார். அப்போது அருகிலிருந்த க்ஷத்ரபந்து தனது கையிலிருந்த வில்லையும் அம்புகளையும் எறிந்துவிட்டு அம்முனிவரைப் பிடித்துத் தூக்கித்தேற்றித் தாமரைக் கிழங்குகளை உணவாகக் கொடுத்து விடாயைப் போக்கி மகிழ்வித்தான். பிறகு அவர் கரைமீதேறி ஒரு மரத்தடியில் உட்கார, அவரது கால் களின் நோவுதீர நன்றாகப் பிடித்து உபசாரங்களைச் செய்தான்.

அப்போது அந்த க்ஷத்ரபந்துவை நோக்கி அம்முனிவர் 'அப்பா! பேருபகாரம் புரிந்த பெரியோனே! யாருடைய சிறந்த குலத்திற் பிறந்தவன் நீ? உனது வரலாறு களைக் கேட்க விரும்புகிறேன்' என்ன, அவனும், 'முனிவர் கோமானே! நான் ஸூர் யவம்சத்தில் விச்வரதன் என்பவற்கு மகனாய்த் தோன்றியவன்' என்று தொடங்கித் தனதுகொடுமைகளை யெல்லாம் ஒன்று மொளிக்காமல் உள்ளபடி சொல்ல, அவற் றைச் செவியுற்ற முனிவர் இவனை நல்வழியிற் செலுத்த வேணுமென்று கருதி 'அப்பா! இனி இத்தீயகுணங்களையெல்லாம் விட்டிட்டு ஜீவகாருண்யத்தையே பரம தர்மமாகக் கடைப்பிடிக்க உன்னாலாகாதோ?' என்று கேட்க, அதற்கு அவன் 'காமம் க்ரோதம் லோபம் மோஹம் மதம் மாச்சரியம் என்னும் தீக்குணங்களுக்குப் பிறப்பிட மான நான் அவற்றை விட்டுப் பிரிந்து ஒரு க்ஷணகாலமும் இருக்ககில்லேன்; என்

மனம் என்வசமன்று; இது தவிர வேறு கட்டளையுண்டாகில் நிறைவேற்றப் பார்க்கிறேன்' என்று சொல்ல, எப்படியாவது இவனை வழிப்படுத்த வேணுமென்று பேராவக்கொண்ட முனிவர் 'இது மாட்டாயாகில் எப்போதும் கோவிந்தா கோவிந்தா வென்றே சொல்லிக் கொண்டிருக்கவாவது உன்னால் முடியுமோ? இருமினாலும் தும்மினாலும் கோவிந்தா! என்றே சொல்லிக் கொண்டிருப்பாயாகில் உனக்கு மிக்க நன்மையுண்டாம் என்று சொல்லிப்போயினர்.

அது முதலாக க்ஷத்ரபந்து கோவிந்த நாமத்தையே இடைவிடாது ஸங்கீர்த்தனம் பண்ணிக் கொண்டிருந்தான். சிலகாலங்கழித்து அவன் மரணமடைந்து அந்தணர் குலத்தில் பூர்வஜன்ம ஸ்மரணத்துடன் பிறந்தான். உடனே அவனுக்கு இக்கொடிய ஸம்ஸாரத்தில் மிக்க நிர்வேதம் உண்டாயிற்று. இப்படிப்பட்ட உத்தமோத்தமமான பிராமணகுலத்தில் எனக்குப் பிறவி நேர்ந்ததும் பூர்வ ஜன்மஸ்மரண முண்டானதும் நான் முன்பு பண்ணின கோவிந்த நாம ஸங்கீர்த்தனத்தின் பயனன்றோ; ஆகவே எனக்குமேலான நன்மையை விளைத்த அந்த ஸ்ரீகோவிந்தனையே நான் ஆராதனஞ் செய்து இப்பொல்லாவழுக் குடம்பைவிட்டுப் பொய்ந்நிலத்தைக் கடந்து நலமந்த மில்லாதோர் நாடாகிய பரமபதத்தை யடையக் கடவேன் என்பதாகத் துணிந்து அங்ஙனமே செய்து பரம பாகவதனாகி வீடு பெற்றனன். .... *

## இதிஹாஸக் கதையொன்று—ஸாவித்ரீ சரித்திரம்

### (விதியை மதியால் வென்றாள்)

விதியானது எவராலும் கடக்க முடியாததெனப்படும்.

"தைவம் திஷ்டம் பாகதேயம் பாக்யம் ஸ்த்ரீ நியதிர் விதி:"

என்று அமரகோச மாதலால் தைவத்திற்கே விதியென்று பெயர். ஒவ்வொரு பிராணிக்கும் ஜனிக்கும்போதே ஆயுள் முதலானவற்றில் ஒருவிதமான தைவஸங்கல்பம் ஏற்பட்டு விடுகிறது. அதுதான் விதி யென்பது. அந்த விதிப்படியேதான் எதுவும் நடைபெற்றுவரும். அது பழுது படமாட்டாது; விதிக்குமாறாக எதுவும் நடைபெறாது.

"லலாடலிகிதா ரேகா பரிமார்ஷ்டும் ந சக்யதே"

என்கிற வசனம் யாவருமறிந்தது. 'தலையெழுத்து ஒருவராலும் தவிர்க்க முடியாதது' என்பது இதன் கருத்து.

உண்மையில் தைவபலமென்பது எல்லாவற்றினும் மேம்பட்டதாதலால் அது அநிவார்யமென்பது மறுக்கமுடியாததே. ஆனால் "மதியினால் விதியை வெல்லமுடியும்" என்பது நுண்ணறிவாளர்களின் முதுமொழியாகக் காண்கிறது. இதற்குச்சேர இதிஹாஸ புராணங்களிற் கதைகளும் பல காணப்படுகின்றன. ஒன்று கேண்மின்.

ஸாவித்ரியினால் தனக்கு ஸத்யவானோடு விவாஹம் நிச்சயிக்கப்பட்டது. இதையறிந்த நாரதமுனிவர் 'ஸத்யவானுடைய ஆயுள் மிகவும் குறுகியுள்ளது; அவனை மணந்துகொண்டால் ஸாவித்ரி நீண்டகாலம் வாழமுடியாது, எப்படியாவது இந்த விவாஹத்தை நிறுத்தி வேறு தீர்க்காயுஸ்ஸான வொரு வரனுக்கு இவளை விவாஹம் செய்து கொடுப்பதே நலம்' என்று தெரிவித்தார். ஸாவித்ரி இதற்குச் சிறிதும் உடன்படவில்லை. விவாஹம் மாநஸிகமென்றும் வாசிகமென்றும் காயிகமென்றும் மூவகைப்படும். இன்னவரனை விவாஹம் செய்துகொள்ள வேணுமென்று நெஞ்சால் நினைப்பது மாநஸிக விவாஹம். அதனை வெளிப்படையாகப் பேசி முடித்துக்கொள்வது வாசிக விவாஹம். அநுஷ்டான பர்யந்தமாக முடித்துக்கொள்வது காயிக விவாஹம். பிராமாணிகர்களுக்கு இம்மூன்றும் துல்யமேயன்றி இவற்றுள் சிறிதும்

வாசி கிடையாது. இன்னுனை மணந்து கொள்வதென்று நெஞ்சால் நினைத்தவாறே அது நடந்தேறியதுதான். அதை மாற்றி வேறு விவாஹம் செய்து கொள்வதென்பது விதவா விவாஹ பர்யாயமேயாகும். உத்தமியான ஸாவித்ரி இதனை எங்ஙனம் இசையவல்லள். ஏற்கெனவே பதியாக வரிக்கப்பட்ட ஸத்யவானைத் தவிர்த்து வேறொருவனை நெஞ்சாலும் நினையேனென்று உறுதிகொண்டாள். என் தலையெழுத்துப்படி ஆகட்டுமென்று கூறி அவனையே மணம்புரிந்து வாழ்ந்து வந்தாள். ஒரு ஸம்வத்ஸரத்திற்குள் ஸத்யவானுக்கு மரணம் அணித்தாயிற்று. ஸாவித்ரி யமனை நேரில் கண்டு பேசித் தனது வாக்சாதுர்யத்தினுல் யமனை யீடுபடுத்தித் தான் தீர்க்க ஸுமங்கலியாக வாழப்பெற்றுள். இக்கதை மஹாபாரதத்தில் வநபர்வாவின் முடிவில் வெகு அழகாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இக் கதையைச் சிறிது விரிவாகக் கேண்மின் ;—

மத்ர தேசத்தரசன் அச்வபதி யென்பவன் ஸாவித்ரீ தேவதையின் உபாஸனையினுல் ஒரு மகளைப்பெற்று அவளுக்கு ஸாவித்ரீ யென்றே பெயரிட்டு வளர்த்துவர, அவளுக்கு விவாஹ யோக்யமான வயஸ்ஸு வந்ததும் அவளது தேஜஸ்ஸு அப்ரதிமமாய் ஒருவர்க்கும் அணுகவொண்ணுதபடி யிருந்ததனுல் அவளை ஒருவரும் மனைவியாக வரியாதிருக்க, பிதாவானவர் 'பெண்ணே! நீயே சென்று உனக்குத் தகுந்த வரனை ஸ்வயம்வரமாக லபிக்கக் கடவை' என்று கட்டளையிட்டு மந்திரிகளுடன் அவளைத் தேரின்மேலேற்றி யனுப்ப, அவளும் தந்தையிட்ட கட்டளையின்படி பல தேசங்களிலும் சென்று பார்த்துத் தனக்கேற்ற வொரு வரனை நிர்ணயித்துக் கொண்டு தந்தையிடம் திரும்பிவந்தாள். அப்போது நாரத மஹர்ஷியும் தந்தையும் உடன்வீற்றிருந்தனர். 'இவள் எங்குப்போய் வருகிருள்? என்ன செய்தி?' என்று முனிவர் கேட்க; ஸாவித்ரியே சொல்லத் தொடங்கினுள்;—ஸால்வதேசத்தரசனை த்யுமத்ஸேனன் கண்ணில்லாதவனும் ராஜ்யமிழந்தவனுமா யிருக்கின்றுனே; அவனுடைய அருமைப் புதல்வன் ஸத்யவானென்பவன், அவனை நான் கணவனுக வரித்துவந்திருக்கிறேனென்றுள். இதுகேட்டவுடனே நாரதமுனிவர் 'அந்த ஸத்யவான் மஹாகுணசாலி யென்பதில் ஐயமில்லை; அவனது ஆயுள்முடிவு இன்னும் ஒரு ஸம்வத்ஸரத்தினுள்ளேயாம்' என்று தெரிவிக்க, அரசன் மகளை நோக்கி 'அம்மா ஸாவித்ரி! முனிவர் சொல்வதைக் கேட்டாயன்றே; அல்பாயுஸ்ஸான அவனை விட்டு வேறு கணவனைத் தேடிக்கொள்' என்று சொல்ல, அதற்கு ஸாவித்ரி சிறிதும் உடன்படாமல் 'என்விதிப்படியாகட்டும்; மாநஸிகமான விவாஹம் முடிந்துவிட்ட பிறகு இனி அதனை மாற்றிக்கொள்வதென்பது நடவாதகாரியம்' என்று சொல்ல, அரசனும் நாரதமுனிவருடைய அநுமதியைப் பெற்றுக்கொண்டு ஸாவித்ரியின் விவாஹத்தை நிறைவேற்றுவதாகப் பரிஜந பரிவார புரோஹிதாதிகளுடன் புறப்பட்டு அரண்யத்தில் தாய் தந்தையோடு வாஸஞ்செய்து கொண்டிருக்கின்ற ஸத்யவானுக்கு முறைப்படி விவாஹம் செய்து கொடுத்துவந்தனன்.

ஸத்யவாந் ஸாவித்ரியோடு இல்லற வாழ்க்கையை நடத்தி வருகிறுன்; ஸாவித்ரி ஸர்வாபரணங்களையும் கழற்றிவிட்டு மரவுரியையும் காஷாயத்தையுமணிந்துகொண்டு பதிசுச்ரூஷையில் ஊன்றி யிருந்தாள். இப்படி காலம் சென்றுகொண்டிருக்கையில் நாரதமுனிவர் சொல்லியிருந்த நாள் குறுகினதை நெஞ்சிற்கொண்டாள். கணவனுடைய மரணம் நான்கு நாளில் நேரப்போகிற தென்றறிந்து முன்னமே யொரு த்ரிராத்ர வ்ரதத்தை யனுஷ்டித்து முடித்தாள். அந்த நாளும் அணுகிவிட்டது. ஸத்யவாந் கோடாலிப்படையை யெடுத்துக்கொண்டு வழக்கம் போல் வனஞ்சென்றுன். அன்று ஸத்யவான் வனமேகி உணவுப் பொருள்களை சேகரித்துக்கொண்டு விறகுவெட்டப் புகுகையில் மரணக்குறிகள் தோன்றத் தொடங்கின. உடனே அவன் தனக்குண்டான கிலேசங்களைச் சொல்லிக்கொண்டு

ஸாவித்ரியின் மடியில் தலைவைத்துத் தரையில் படுத்துக்கொண்டான். நாரதமுனிவர் சொன்னபடி கணவனது மரணகாலம் ப்ராப்தமாய்விட்ட தென்றறிந்த ஸாவித்ரி மிகவும் சோகித்திருக்கையில், பாசமும் கையுமாக அங்கு வந்து நின்ற யமனையுங் கண்டு மெல்ல வெழுந்து கைகூப்பி நின்று 'உம்மைப் பார்த்தால் அமாநுஷ தேவதை யாகக் காண்கிறது; நீர் யார்? இவ்விடம் எதற்காக வந்தீர்?' என்று விநயமாய்க் கேட்க; அதற்கு அவர் 'அம்மா ஸாவித்ரி! நீ சிறந்த பதிவிரதையாதலால் உன்னோடு பேசுகிறேன். நான் யமன்; உனது கணவனுடைய வாழ்நாள் முடிந்துவிட்டபடியால் அவனுயிரைக் கொண்டுபோக வந்திருக்கிறேன்; பெரும்பாலும் எனது கிங்கரர்களே வந்து இக்காரியம் செய்துபோவது வழக்கம்; ஆயினும் உன் கணவன் பரமதார்மிக னகையாலே அவர்கள் இவனை யணுக சக்தரல்லரென்று நானே வரநேர்ந்தது' என்று சொல்லிக்கொண்டு ஸத்யவானுயிரைக் கவர்ந்துகொண்டு தென்திசைநோக்கிச் செல்லலுற்றான். ஸாவித்ரியானவள் மிக்க வருத்தத்துடன் யமனைப் பின் சென்றாள். அதுகண்ட யமன் 'அம்மா ஸாவித்ரி! நீ என்னோடு கூட வருவதில் பயனில்லை; திரும்பிச் செல்; கணவனுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களை முறைப்படி நிறை வேற்றப்பார்' என்றான். அப்போதும் ஸாவித்ரி மீளாமல், கணவனுயிர் செல்லு மிடத்தே என்னுயிரும் செல்லத்தக்கதன்றோ வென்று சில தரும நுட்பங்களைச் சொன்னாள். அவைகேட்ட யமன் மிகமகிழ்ந்து 'அம்மா! உனது கணவனுயிரைத் தவிர்த்து வேறு வேண்டிய வரம் என்பால் பெற்றுப்போ' என்றான். 'கண்கெட்டு வனத்தில் கிலேசப்படுகின்ற எனது மாமனர் கண்பெற்று வாழ அருள்புரிக' என்று கோரினாள். யமனும் அங்ஙனமே யாகுக வென்றருள் செய்தவிடத்தும் ஸாவித்ரி மீளாமலே பின்னையும் தொடர்ந்தாள். 'அம்மா! வீணாகச் சிரமப்பட்டு என்னைப் பின் தொடராதே; திரும்பிச் செல்' என்று யமன் சொல்லவும் திரும்பாமலே மற்றும் பல தரும நுட்பங்களைப்பற்றிப் பேசிக்கொண்டே பின் தொடர்ந்தாள். அப் பேச்சுக் களுக்கு மிகமகிழ்ந்த யமன் 'கணவனுயிரைத் தவிர்த்து வேறொரு வரம் பெற்றுப்போ' என்றான். 'ராஜ்யப்ரஷ்டரான மாமனர் பண்டுபோல ராஜ்யம் பெற்று இனிதுவாழ வேணுமென்று கோரி, அங்ஙனமே வரம் பெற்றும் மீளாமலே மேலும் பல தரும ஸூக்ஷ்மங்களைப் பேசிக்கொண்டே பின்தொடர்ந்தாள். தன் தந்தைக்கு நூறு புத்திரர்கள் பிறக்கவேணுமென்று வரம் பெற்றாள். பின்னையும் பின்தொடர்ந்து இனிதாகப் பேசிக்கொண்டுபோய், தனக்கு ஸத்யவானிடத்தில் நூறு புத்திரர்கள் பிறக்கவேணுமென்று வரம்கேட்டாள். யமன் மெய்மறந்து அந்த வரத்தையும் கொடுத்து ஸத்யவானுடைய உயிரையும் தந்துபோயினன். மதியினல் விதியை வென்றுவிட்டாளன்றோவிவள்.

மார்க்கண்டேயன் பதினாறுபிராயமே வாழும் விதியுடையனாயிருந்து வைத்தும் தேவ்தாஸமாராதன பலத்தினால் விதியைக் கடந்து நீண்ட ஆயுள்பெற்றமை கேள்விப் படுகிறோம். இங்ஙனே பலபல கதைகளினால் விதியை மதியால் வெல்லலாமென்பது திண்மை பெறுகின்றது. மதியிலாதவர்களே விதிக்கு வசப்பட்டிருப்பர்கள்.

---

ஆங்காங்கு லக்ஷார்ச்சனைகள். அடுத்த மாதத்தில் நேரும் அஷ்டக்ரஹ கூடம் காரணமாகப் பலவகை அநிஷ்ட சங்கைகள் தோன்றிச் சிலரோ பலரோ அஞ்சி யிருக்கின்றனர். நமது நாட்டிற்கு எவ்விதமான தீங்கும் கிடையாதென்று பல சோதிடர் திடமாகக் கூறுகின்றனர். ஆயினும் தத்பரி ஹாரார்த்தமாக எங்கும் பலவகை நற்கிரிசைகள் நடைபெற்று வருகின்றன. ஸுதர்சந சதகம், ஸஹஸ்ர நாமம் முதலியவற்றின் பாராயணங்களும் லக்ஷார்ச்சனைகளும் பல தேவஸ்தானங் களிலும் மற்றும் பல விடங்களிலும் நடைபெற்று வருகின்றன. அடுத்த தை மாத முதலில் திருக்கோட்டியூர் தேவஸ்தானத்தில் லக்ஷார்ச்சனை நடைபெற விருக்கின்றது. .... .... .... .... .... *

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்,



## ஸர்வஜ்ஞரான பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த அஷ்டாதசரஹஸ்யங்களுள்

# தத்வத்ரயம்.

விசதவாக்சிகாமணிகளான மணவாளமாமுனிகளருளிச்செய்த வியாக்கியானத்தைத் தழுவி ஸ்ரீ காஞ்சீ, பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

## ஸாரார்த்ததீபிகையுடன் கூடியது

## முன்னுரை.

நம்முடைய ஸம்ப்ரதாயத்தில் மஹோபகாரகர்களாகத் திருவவதரித்தருளின ஆசார்யர்களில் பிள்ளைலோகாசார்யர் ப்ரதாந பரிகணிதராவர். இவ்வாசிரியர் ஸர்வஜ்ஞராக எழுந்தருளியிருந்தது பெரிதன்று; பரமகாருணிகராயெழுந்தருளியிருந்ததே இவர்க்குத் தன்னேற்றம். ஸம்ஸாரிகளை முமுக்ஷுக்களாக்கவும், முமுக்ஷுக்களை முக்தப்ராயர்களாக்கவும், முக்தப்ராயர்களை முக்தர்களாக்கவும் வல்ல திவ்ய ஸூக்திகளை யருளிச்செய்தவர் இவ்வாசிரியரொருவரே யாவர். இவருடைய தனியனில்தான் "संसारभोगि संदष्टजीवजीवातवे नम :– ஸம்ஸாரபோகி ஸந்தஷ்ட ஜீவஜ்வாதவே நம:" என்கிற விலக்ஷணமான வாக்விந்யாஸம் அமையக் காண்கிறோம். ஸம்ஸாரமாகிற கொடிய ஸர்ப்பத்தினால் கடியுண்ட சேதநர்கள் உஜ்ஜீவிக்கப் பெறவேணுமாகில் பிள்ளைலோகாசார்யருடைய ஸ்ரீ ஸூக்திகளைக் கொண்டே உஜ்ஜீவிக்க வேணுமென்று பூருவர்கள் அறுதியிட்டிருந்தார்கள். அரிய பெரிய ரஹஸ்யார்த்தங்களை ஏடுபடுத்தி வைத்து உலகத்தை வாழ்விக்க முந்துற முன்னம் ப்ரவர்த்தித்தவர் இவ்வாசிரியரே. இவருடைய ரஹஸ்ய க்ரந்தங்களைத் தழுவி ஆச்சான் பிள்ளை முதலானோர் சிலர் சில ரஹஸ்ய க்ரந்தங்களை இட்டருளினர். ஸூத்ரம் போன்ற இவ்வாசார்ய திவ்ய ஸூக்திகளின் ஆழ்பொருளைத் தேனும் பாலுமமுதுமாக வெடுத்துரைத்துப் பரமோபகாரம் செய்தருளினவர் மணவாளமாமுனிகள். விசதவாக்சிகாமணிகளென்னும் விருது அவரொருவர்க்கே ஏற்கும். அவருடைய அமுதமென்மொழிகளான வியாக்யானங்கள் அவதரித்திராவிடில் பிள்ளைலோகாசார்யருடைய பரம கருணையும் பயனற்றதாகும். உபயவேதாந்த ஸாரார்த்தங்களை நாம் மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களிலிருந்துதான் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியும்.

நமக்கு, திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகமாகிற ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தஜ்ஞானம் எப்படி ஆவச்யகமோ; அப்படியே சித்து அசித்து ஈச்வரனாகிற தத்வத்ரயத்தின் ஸ்வரூப ஸ்வபாவஜ்ஞானமும் மிகவுமாவச்யகமாகும். ஏற்கெனவே பிள்ளை லோகாசார்யரருளிச்செய்த தத்வசேகரம் முதலான சில திவ்ய க்ரந்தங்களிருந்தாலும் தத்வத்ரய மென்கிற இந்த க்ரந்தமே சிதசிதீச்வர ஸ்வரூப ஸ்வபாவ விசேஷங்களை ஸங்க்ரஹமாகவும் ஸவ்யக்தமாகவும் வெளியிட்டது. இந்த திவ்ய க்ரந்தம் த்ராவிட பாஷையில் அமைந்ததாயினும் விஷயங்கள் மிகவும் கஹனங்களாகையாலே விவரித்துரைக்க வேண்டுவது இன்றியமையாததாகும். ஆசார்ய ஹ்ருதயஸாரம், ஸ்ரீவசநபூஷணஸாரம், முமுக்ஷுப்படி ஸாரம் என்னும் நூல்களை அடியேன் எளிய தெளிவு நடையில் எழுதியிருப்பதுபோலவே தத்வத்ரய ஸாரமான விதையும் மணவாளமாமுனிகளின் திருவடிகளைச் சிந்தனை செய்துகொண்டே எழுதப்புகுகின்றேன். ... ... ...

முன்னுரை முற்றிற்று

ஸ்ரீரஸ்து.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்

श्रीशैलेशदयापात्रं धीभक्त्यादिगुणार्णवम्। यतीन्द्रप्रवणं वन्दे रम्यजामातरं मुनिम्।
लोकाचार्याय गुरवे कृष्णपादस्य सूनवे। संसारभोगिसंदष्टजीवजीवातवे नमः॥

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே,
ஸம்ஸாரபோகிஸந்தஷ்ட ஜீவஜீவாதவே நம:

# தத்வத்ரயம் — சித்ப்ரகரணம்.

1. முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷமுண்டாம் போது தத்வத்ரயஜ்ஞான முண்டாக வேணும்.

---

ஸ்ரீ:

## தத்வத்ரய ஸாரார்த்த தீபிகை.

1. ஸம்ஸார பந்தத்தில் நின்றும் விடுபடவேணுமென்னுமிச்சையும் சைதந்யப்ரயோஜநம் பெறவேணுமென்னுமிச்சையுமுடைய விலக்ஷணுதிகாரிக்கு மோக்ஷமாகிற புருஷார்த்தம் ஸித்திக்கும் போதைக்கு தத்வத்ரயத்தினுணர்ச்சி இன்றியமையாததாகும். "तत्त्वज्ञानान्मुक्तिः— தத்வஜ்ஞாநாத் முக்தி:" என்பது வேதாந்திகளின் கொள்கை. பெரும்பாலும் இதுவே ஸகல ஸித்தாந்த ஸாதாரணமான வார்த்தை. தத்வம் என்றால் எது? தத்வங்கள் எத்தனை? மோக்ஷமாவது என்ன? என்று உட்புகுந்து விசாரிக்குமளவில் பல பல மதவேற்றுமைகள் விளையுமாகிலும் 'தத்வஜ்ஞானத்தினுல் தான் மோக்ஷம்' என்னுங்கொள்கையில் பல மதங்கள் ஒன்று சேர்ந்திருக்கின்றன வென்று காண்கிறோம். தத்துவங்களை ஏற்றக் குறைவாகக் கொள்ளுகிற பாஹ்ய குத்ருஷ்டிகள் போலன்றியே மூன்றே தத்துவமென்பது ஸித்தாந்திகளின் கொள்கையாகும். *भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा जुष्टस्ततस्तेनामृतत्वमेति— போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா ஜுஷ்டஸ் ததஸ் தேந அம்ருதத்வமேதி. * என்று உபநிஷத்து ஓதுகையாலே சேதநன் அசேதநம் ஈச்வரன் என்கிற மூன்று தத்துவங்களையும் அறிந்தே—அவற்றின் ஸ்வரூபஸ்வபாவங்களை யறிந்தே முக்திபெற முடியும் என்பது நம் ஆசாரியர்களின் கொள்கை. ஆனால்,

*पशुर्मनुष्यः पक्षी वा ये च वैष्णसंश्रयाः। तेनैव ते प्रयास्यन्ति तद्विष्णोः परमं पदम्—

பசுர் மநுஷ்ய: பக்ஷீ வா யே ச வைஷ்ணவஸம்ச்ரயா:, தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத் விஷ்ணோ: பரமம் பதம் * என்று ஒரு வைஷ்ணவனோடு ஸம்பந்தம் பெற்ற பசு பக்ஷி முதலியனவும் அந்த வைஷ்ணவாபிமாநத்தினாலேயே முக்திபெற முடியுமென்றும்:

* यं यं स्पृशति पाणिभ्यां यं यं पश्यति चक्षुषा। स्थावराण्यपि मुच्यन्ते किं पुनर्बान्धवा जनाः—

யம் யம் ஸ்ப்ருசதி பாணிப்யாம் யம் யம் பச்யதி சக்ஷுஷா, ஸ்தாவராண்யபி முச்யந்தே கிம்புநர் பாந்தவா ஜநா: * என்று, ஒரு வைஷ்ணவனுடைய கையால் தொடப்படுதலும் கண்ணால்

2. தத்வத்ரயமாவது - சித்தும், அசித்தும், ஈச்வரனும்.

3. சித்தென்கிறது - ஆத்மாவை.

4. ஆத்மஸ்வரூபம்— "சென்றுசென்று பரம்பரமாய்" என்கிறபடியே, தேஹேந்த்ரிய மந: ப்ராண புத்தி விலக்ஷணமாய், அஜடமாய், ஆநந்தரூபமாய், நித்ய

---

கடாக்ஷிக்கப்பெறுதலுமான பாக்கியம் பெற்ற திர்யக் ஸ்தாவரங்களுக்கும் மோக்ஷமுண்டாகுமென்றும் இப்படி சாஸ்த்ரம் சொல்லுகையாலே ஜ்ஞாநயோக்யதையில்லாத திர்யக் ஸ்தாவரங்களுக்கும் வைஷ்ணவ ஸம்பந்தத்தாலே மோக்ஷஸித்தி யென்று தெரியாநிற்க, தத்வஜ்ஞானமுண்டானாலல்லது மோக்ஷமுண்டாகமாட்டா தென்று சொல்லக் கூடுமோவென்று சங்கிக்கவேண்டா; மோக்ஷத்தில் இச்சையுடைய சேதநனுக்கே தத்வஜ்ஞான முண்டாகவேணு மென்றன்றோ இங்குச் சொல்லியுள்ளது. வைஷ்ணவாபிமாநத்தாலே மோக்ஷம் பெறுகிற திர்யக் ஸ்தாவரங்களுக்கு முமுக்ஷுத்வமும் தத்வஜ்ஞானமுமாகிற இரண்டுமில்லையானாலும்அபிமாநிக்கிறவிலக்ஷணாதிகாரிக்கு இவையிரண்டும் குறையற்றிருக்க வேண்டுமாகையாலே நியமபங்கம் யாதுமில்லை. இங்கே மணவாள மாமுனிகளின் திவ்யஸூக்தி காண்மின்; —"அபிமாநியானவனுடைய ஜ்ஞாநவிசேஷத்தைக் கடாக்ஷித்தே அபிமாநாந்தர்ப்பூதமான இவற்றுக்கும் [—திர்யக் ஸ்தாவரங்களுக்கும்] ஈச்வரன் கார்யம் செய்கையாலே 'தத்வஜ்ஞாநாந்மோக்ஷ' மென்கிறவிது அவ்விடத்திலும் ஸத்வாரகமாக ஸித்திக்கும்" என்று.

இனி, மோக்ஷஸித்திக்காக மூன்றுதத்துவங்களையும் அறியவேணுமென்கிற நிர்ப்பந்தம் ஏதுக்கு? "तमेवं विद्वानमृत इह भवति । नान्यः पन्था अयनाय विद्यते— தமேவம் வித்வாந் அம்ருத இஹ பவதி! நாந்ய: பந்தா அயநாய வித்யதே" என்று வேதாந்தங்கள் ஈச்வரதத்வத்தைப் பற்றின ஞானமொன்றுமே மோக்ஷ ஸாதனமென்று ஓதியிருக்க,மற்றையிரண்டு தத்துவங்களையுங்கூட அவசியம் அறியவேணுமென்கிற நிர்ப்பந்தம் பொருந்துமோ? என்று சிலர் சங்கிப்பர்கள். கேண்மின், ஈச்வரதத்துவ மொன்றை நன்றாக அறிந்தால் போதும்; ஆனால் அந்ததத்துவத்தை யறியும்போது அதைஸகலசேதநாசேதநவிலக்ஷணமாகவும் அந்தஇரண்டுதத்வங்களுக்குக் காரணமாகவும் வ்யாபகமாகவும் தாரகமாகவும் நியாமகமாகவும் சேஷியாகவும் அறியவேண்டுமன்றோ; அவற்றின்ஸ்வரூப ஸ்வபாவங்களையறியாதபோது இப்படியெல்லாமறிந்துகொள்ள இயலாதாகையாலே மூன்று.தத்வங்களையும் அறியவேணுமென்றது மிகப்பொருந்தும். *तमेवं विद्वान्— தமேவம்வித்வாந்* என்ற ச்ருதியே *भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा— போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா* என்றும் *पृथगात्मानं प्रेरितारं च मत्वा— ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா* என்றும் ஓதியிருக்கையாலே இவ்விஷயத்தில் வேதாந்த விரோதப்ரஸங்கமுமில்லையென்றுணர்க. ... (க)

(2. 3.) "முமுக்ஷுவான சேதநனுக்கு மோக்ஷமுண்டாம்போது தத்வத்ரய ஜ்ஞானமுண்டாகவேணும்" என்று கீழே சொல்லிற்று; தத்வத்ரய மென்கிற சொல்லால் விவக்ஷிதங்களான மூன்று தத்துவங்கள் இன்னவை யென்று தெரிந்துகொள்ள வேணுமே; அவை எவை யென்னில் சித்தும் அசித்தும் ஈச்வரனுமாகிற மூன்று தத்வங்களே தத்வத்ரய மெனப்படுவன வென்கிறது. சைதந்யத்திற்கு [அறிவுக்கு] ஆதாரமானவஸ்து சித்து எனப்படும். அறிவையுடைத்தாகாத வஸ்து அசித்தெனப்படும். [சேதநன் என்பதும் சித்து என்பதும் பர்யாயம்; அசேதநம் என்பதும் அசித்து என்பதும் பர்யாயம்.] சேதநா சேதநப்பொருள்களுக்கு நியாமகனானவன் ஈச்வரனெனப்படுவன். சித்து என்பது ஜீவாத்மாவை.

(4-6.) ஜீவாத்மாவின் ஸ்வரூப மிருக்கும்படி யெங்ஙனேயென்னில், *சென்றுசென்று பரம்பரமாய்* என்று ஆழ்வாரருளிச் செய்தபடியே தேஹத்திற் காட்டிலும் இந்த்ரியத்திற்காட்டிலும் மநஸ்ஸிற்காட்டிலும் ப்ராணனிற்காட்டிலும் ஜ்ஞாநத்திற்காட்டிலும் வேறுபட்டதாய் அஜடமாய் ஆனந்தரூபமாய் நித்யமாய் அணுவாய் அவ்யக்தமாய் அசிந்த்யமாய்

மாய், அணுவாய், அவ்யக்தமாய், அசிந்த்யமாய், நிரவயவமாய், நிர்விகார மாய், ஜ்ஞாநாச்ரயமாய், ஈச்வரனுக்கு நியாம்யமாய், தார்யமாய், சேஷமா யிருக்கும்.

௫. ஆத்மஸ்வரூபம் தேஹாதி விலக்ஷணமானபடி யென்? என்னில் ;

௬. தேஹாதிகள் "என்னுடைய தேஹாதிகள்" என்று, ஆத்மாவில் வேறுபட்டுத் தோற்றுகையாலும், 'இதம்' என்று தோற்றுகையாலும், ஆத்மா "நான்" என்று தோற்றுகையாலும், இவை யொருகால் தோற்றி யொருகால் தோற்றாமையாலும், ஆத்மா எப்போதுந் தோற்றுகையாலும், இவை பலவகையாலும், ஆத்மா ஒருவனாகையாலும், ஆத்மா— இவற்றில் விலக்ஷண னென்று கொள்ளவேணும்.

---

நிரவயவமாய் நிர்விகாரமாய் ஜ்ஞானத்துக் கிருப்பிடமாய் ஈச்வரனுக்கு சரீரமாயிருக்கும். [இந்த] ஆகாரங்கள் மேலேக்ரமேண விவரிக்கப்படும்.] தேஹமே ஆத்மாவென்றும் இந்த்ரியங்களேஆத்மா வென்றும் மநஸ்ஸே ஆத்மாவென்றும், ப்ராணனே ஆத்மாவென்றும் ஜ்ஞானமேஆத்மாவென்றும்- இப்படிப்பலர்பலவகையாகச்சொல்வதுண்டு; இவையொன்றும்ஆத்மாவல்ல; இவையெல்லாவற்றிலும் வேறுபட்டு 'அஹம்' (நான்) என்கிற வ்யவஹாரத்திற்கு இலக்கான பொருளே ஜீவாத்மாவெனப் படும். தேஹம் இந்த்ரியம் முதலானவை ஆத்மாவல்ல என்பதை எங்ஙனே தெரிந்துகொள்ளும் படி யென்னில், என்னுடைய தேஹம். என்னுடைய இந்த்ரியம், என்னுடையமனம், என்னு டையப்ராணன், என்னுடைய ஜ்ஞானம் என்றிப்படி 'என்னுடையது' என்கிற புத்திக்கும் அப்படிப்பட்ட வ்யவஹாரத்திற்கும் விஷயமாய்க் கொண்டு தேஹாதிகள் தோற்றுகின்றன; 'என்னுடைய' என்கிற சொல்லானது நான் என்பதன் ஆறும் வேற்றுமை, நான் என்பதற்கு எது அர்த்தமோ அதுவே தேஹம் இந்திரியம்...என்பவற்றுக்கும் அர்த்தமாக இருக்கமுடியாது. 'நான் தேஹம், நான் இந்திரியம்' என்றிப்படி வ்யவஹாரமிருந்தால் தான் அஹமர்த்தமும் தேஹாதிகளும் ஒன்றேயாயிருக்கமுடியும். 'என்னுடைய மகன், என்னுடைய பிதா' என்றால் மகனும் பிதாவும் அஹமர்த்தத்திற் காட்டில் வேறுபட்டவர்களே யன்றி அஹமர்த்தமல்ல வென்று எப்படித்தெரிந்து கொள்ளுகிறோமோ, அப்படியே 'என்னுடைய தேஹம் என்னுடைய இந்திரியம் இத்யாதி வ்யவஹாரங்களினால் 'தேஹாதிகள் அஹமர்த்தமல்ல — அஹமர்த்தத்திற் காட்டில் வேறுபட்டவை' என்று தெரிந்து கொள்ளக் குறையில்லை. அன்றியும். 'என்னுடைய தேஹம் என்னுடைய இந்திரியம்' என்று தோற்றுவதுபோல 'இது தேஹம் இது இந்திரியம் என்றிப்படி தேஹாதிகள் இதம் புத்தி வ்யவஹாரங்களுக்கும் விஷயமாய்க் கொண்டு தோற்று கின்றன. இதனாலும் அஹமர்த்தத்திற் காட்டில் அவை வேறுபட்டவை யென்று அறுதியிடப் படும். இப்படியல்லாமல் ஆத்மாவானவன் நானென்கிற சொல்லுக்கு விஷயமாய்க் கொண்டே தோற்றுகையாலே தேஹம் முதலியவற்றிற் காட்டில் (ஆத்மா) வேறு பட்டவனாவன். இங்கே சிலர் சங்கிக்கக் கூடும்;— ஆத்மா எப்படி அஹம்புத்தி விஷயமாய்க் கொண்டு தோற்றுகிறானோ அப்படியே தேஹமும் 'ஸ்தூலோஹம், க்ருசோஹம்' என்று அஹம் புத்தி விஷயமாகித் தோற்ற வில்லையோ? நான் ஸ்தூலனாயிருக்கிறேன், நான் க்ருசனாயிருக்கிறேன்' என்கிற வ்யவஹாரங்கள் அபலபிக்க முடியாதவைக ளன்றோ; ஸ்தூலத்வமோ க்ருசத்வமோ ஆத்மாவுக்குக் கிடையாதே; தேஹத்திற்குத் தானே யுள்ளது. ஆக, ஸ்தூலோஹம் க்ருசோஹம்என்கிற வ்யவஹாரங்களில் தேஹம் அஹமர்த்தமாய்க் கொண்டு தோற்றுகையாலே இது ஆத்மாவாயிருக்கத் தட்டென்? என்று சங்கிக்கக்

7. இந்த யுக்திகளுக்குக் கண்ணழிவுண்டேயாகிலும், சாஸ்த்ரபலத்தாலே ஆத்மா தேஹாதி விலக்ஷணனாகக் கடவன்.

8. அஜடமாகையாவது-ஜ்ஞானத்தை யொழியவும் தானே தோற்றுகை.

---

கூடும். இந்த சங்கைக்குப் பரிஹாரம் கேண்மின்; 'ஸ்தூல : அஹம்' என்பதற்கு நான் ஸ்தூல சரீரத்தோடு கூடியவன் என்றும். 'க்ருச : அஹம்' என்பதற்கு — நான் க்ருசமான சரீரத் தோடு கூடியவன் என்றும் பொருள். 'அஹம் மநுஷ்ய:, அஹம் தேவ :' என்றால் நான் மநுஷ்ய சரீரயுக்தன். நான் தேவசரீர விசிஷ்டன் என்று பொருள் படுவதுபோல இதனைக் கொள்க. அன்றியும், தேஹமானது 'ஸ்தூலோஹம், க்ருசோஹம்' என்று அஹம்புத்தி வ்யவஹார விஷயமாய்க் கொண்டு ஆத்மத்வேந தோற்றுவது ஜாக்ரத் தசையில் மட்டுமே யன்றி ஸுஷுப்தி தசையில் இல்லையே. ஜாக்ரத்தசையோடு ஸுஷுப்தி தசையோடு வாசியற எப்போதும் ஆத்மா தோற்றுகிறபடியைக் காணலாம். எங்ஙனே காணலாமென்னில் ; 'உறங் குவதற்கு முன்பு இவையெல்லாமறிந்திருந்த நான் உறங்குகிறபோது என்னுடம்புமுட்பட அறிந்திலேன்' என்று ஸர்வஸம்ப்ரதிபந்நமான வ்யவஹாரமுள்ளது. இதனால் இரண்ட வஸ்தையிலும் தேஹத்திற்காட்டில் வேறுபட்ட ஆத்மாவுளனென்பது தேறி நிற்கும். அன்றி யும் ஜனன மரணங்களை யடையுந் தன்மையினாலே தேஹம் ஒருக்கால் தோற்றி ஒருக்கால் தோற் றாதிருக்கக் காண்கிறோம் ; ஆத்மா ஜனன மரண ரஹிதனாய்க் கொண்டு எப்போதும் தோற்றா நின்றான். 'நான் முற்பிறவியில் பண்ணினவதினுடைய பலன் இது' என்கிற லோக வ்ய வஹாரமும் இங்குச் சான்றாகும். இத்தகைய ஹேதுக்களாலே தேஹாதி விலக்ஷணன் ஆத்மா என்னுமிடம் அறியத்தக்கது. ... ... (6)

7. இங்ஙனே யுக்தி கொண்டு ஸாதிப்பது ஒருபுற மிருக்க சாஸ்த்ர பலத்தாலும் இது ஸித்திக்கக் கடவது. நாம் எதையும் யுக்தி கொண்டே ஸாதிப்பவர்களல்லோம் ; யுக்திக்கு ஒருகால் கண்ணழிவு விளையவுங் கூடும் ; எதற்கும் நமக்கு சாஸ்த்ரமே ப்ரபல ப்ரமாணம். *पञ्चविंशोऽयं पुरुष :* पञ्चविंश आत्मा भवति* भूतानि च कवर्गेण चवर्गेणेन्द्रियाणि च। टवर्गेण तवर्गेण ज्ञानगन्धादयस्तथा। मनः पकारेणैवोक्तं फकारेण त्वहंकृतिः। बकारेण भकारेण महान् प्रकृतिरुच्यते। आत्मा तु स मकारेण पञ्चविंशः प्रकीर्तितः॥* पञ्चभूतात्मके देहे देही मोहतमोवृतः। अहं ममैतदित्युच्चैः कुरुते कुमतिर्मतिम्। आकाशवाय्वग्निजलपृथिवीभ्यः पृथक् स्थिते। अनात्मन्यात्मविज्ञानं कः करोति कलेवरे॥* என்றிப்படி ச்ருதிஸ்ம்ருதிகள் முதலிய ஸகல சாஸ்த்ரங்களாலும் ஆத்மா தேஹாதிகளிற் காட்டி லும் வேறுபட்டவனென்று அறுதியிடப்பட்டிருக்கிறது. ... ... (7)

8. இப்படி தேஹாதிவிலக்ஷணமான ஆத்மவஸ்துவானது அஜடமென்றும் ஆனந்தரூப மென்றும் நித்யமென்றும் அணுவென்றும் அவ்யக்தமென்றும் அசிந்த்யமென்றும் நிரவயவ மென்றும் நிர்விகாரமென்றும் ஜ்ஞாநாச்ரயமென்றும் ஈச்வரனுக்கு சரீரபூதமென்றும் சொல் லிற்று கீழ் ; இவற்றையெல்லாம் விசதமாகத் தெரிந்துகொள்வதே ஆத்மஸ்வரூபஜ்ஞான மாகும். இனி அடைவே இவை விவரிக்கப்படும். ஆத்மா அஜடமாயிருக்கையாவது ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கை. (அதாவது) தன்னுடைய தோற்றத்திற்கு இன்னொரு வஸ்துவை எதிர் பார்க்க வேண்டாதபடி யிருக்கை. ஒரு தீபமானது இன்னொரு தீபத்தை அபேக்ஷியாமலே தன் வ்யவஹாரத்திற்குத் தான் ஹேதுவாகிறாப்போலே ஆத்ம வஸ்துவானது ஜ்ஞானத்தைக் கூட அபேக்ஷியாமல், தானே தோற்றிக்கொண்டிருப்பதுதான் அஜடத்வமாவது. "अत्रायं पुरुषः स्वयंज्योतिर्भवति— அத்ராயம் புருஷ : ஸ்வயம்ஜ்யோதிர் பவதி" என்பது முதலான ப்ர மாணங்கள் இங்கே காணத்தக்கன. ... ... ... (8)

9. ஆநந்தரூபமாகையாவது - ஸுகரூபமா யிருக்கை.

10. உணர்ந்தவன் ஸுகமாக வுறங்கினே னென்கையாலே ஸுகரூபமாகக்கடவது

11. நித்யமாகையாவது-எப்போது முண்டாகை.

12. எப்போதுமுண்டாகில் ஜந்ம மரணங்களுண்டாகிறபடி யென்? என்னில்; ஜந்மமாவது-தேஹஸம்பந்தம், மரணமாவது-தேஹவியோகம்.

13. அணுவானபடி என்னென்னில்;

14. ஹ்ருதய ப்ரதேசத்தில் நின்றும் உத்க்ரமித்துப் போவது வருவதாமென்று சாஸ்த்ரம் சொல்லுகையாலே, ஆத்மா அணுவாகக் கடவது.

---

9, 10. ஆத்மவஸ்து ஆநந்தரூபமுமாயிருக்குமென்று சொல்லிற்று; அது எங்ஙனே யென்னில்; ஆத்மஸ்வரூபம் தனக்குத் தானே ஸுகரூபமாயிருக்கும். இதை நாம் நன்ருகத் தெரிந்துகொள்ள வேண்டியதற்கு சாஸ்த்ர ப்ரமாணமொன்றுந் தேடவேண்டா; உறங்கி யெழுந்தவன் 'நான் ஸுகமாக வுறங்கினேன்' என்று சொல்லுவது ஸர்வ ஸம்ப்ரதிபந்நம். உறக்க நிலைமையில் வெளி விஷயங்களின் அநுபவம் சிறிதுமில்லை யென்றும், கேவலம் ஆத்மஸ்வரூபம் மட்டுமே ஸ்புரித்துக்கொண்டிருக்கிற தென்றும் தெரிந்துகொண்டிருக்கிறோம். அத்தகைய உறக்கம் விட்டு எழுந்தவன் 'ஸுகமாகவுறங்கினேன்' என்றால் அந்த ஸுகம்ஸ்வரூப ஸுகமே யாகவேணுமே யல்லது வேறொரு ஸுகத்திற்கு ப்ரஸக்தியில்லையே. 'ஸுகமாகவுறங்கினேன்' என்பதற்கு இப்போது ஸுகமுண்டாகும்படி யுறங்கினேனென்று பொருள் கொள்ளலாகாதோ வென்னில், உள்ள சொல்வடிவத்திற்கு இங்ஙனம் பொருளாக வழியில்லையே. ஒருவன் நன்ருகப் பாடிவிட்டு, பிறகு 'இனிதாகப் பாடினேன்' என்கிருன். இதற்குப் பொருளென்ன? பாடின பிறகு இனிமையுண்டாகும்படி பாடினேனென்பதா பொருள்? பாடும்போதே இனிமையுண்டாகும்படி பாடினேனென்று பொருளல்லவா? அதுபோல ஸுகமாக வுறங்கினேனென்ற விடத்திலும் உறங்கும் போதே ஸுகமுண்டாகும்படி யுறங்கினேன் என்று பொருள் படுவதுதான் நியாயமானது. இதனுல் ஆத்மாவினுடைய ஆனந்தரூபத்வம் ஸுஸ்பஷ்டமாகக் குறையில்லை. *நிர்வாணமய ஏவாய மாத்மா *ஜ்ஞாநாநந்தமயஸ் த்வாத்மா* ஜ்ஞாநாநந்தைகலக்ஷணம்*இத்யாதி ப்ரமாணங்களும் இங்கே அநுஸந்திக்கவுரியன. ... ... (9, 10)

11, 12. ஆத்மஸ்வரூபம் நித்யமாயிருக்குமென்று சொல்லிற்று: நித்யத்வமாவது—ஒருகால் இருந்து மற்றொருகால் இல்லாமற்போகையன்றிக்கே எப்போதுமுண்டாயிருக்கை. எப்போதுமுண்டாயிருக்குமாகில், சாஸ்த்ரங்களால் ஆத்மாவுக்குச் சொல்லப்படுகிற ஜன்ம மரணங்கள் கூடும்படி எங்ஙனே யென்னில்; ஜனிக்கிருன் மரிக்கிருனென்ருல் ஆத்மாவுண்டாகி ஆத்மா இல்லையாகிருன் என்றதாக அர்த்தமன்று, ஆத்மா தேஹத்தோடு ஸம்பந்திப்பது ஜன்மமெனப்படுகிறது; தேஹத்தைவிட்டுப் பிரிந்துபோகை மரணமெனப்படுகிறது. ஆகவே ஆத்மா எப்போதுமுளனென்னத் தட்டில்லை. *न जायते म्रियते वा विपश्चित्– நஜாயதே ம்ரியதே வா விபச்சித்* இத்யாதி ப்ரமாணங்களை இங்கே அநுஸந்திப்பது. ... ... (11. 12)

13, 14. ஆத்மஸ்வரூபம் அணுவாயிருக்குமென்று சொல்லிற்று; இதையறியும்படி எங்ஙனே யென்னில்; ஆத்மாவுக்கு ஹ்ருதயத்திலிருப்பையும், அங்கிருந்து உத்க்ரமணமாவதையும், மேலுலகத்திலிருந்து கீழுலகத்திற்குத் திரும்பி வருகையையும் சுடர்மிகு சுருதி சொல்லுகையாலே அணுவென்னுமிட மறியலாம். விபுவாகில் இவையொன்றும் கூடாதே. *उत्क्रान्ति–गत्यातीगनाम्– உத்க்ராந்திகத்யாகதீநாம்* என்கிற ப்ரஹ்ம ஸூத்ரமும் அதற்கு அவஷ்டம்பமான ப்ரமாணங்களும் இங்கே அநுஸந்திப்பது. ... ... (13, 14)

15. அணுவாய், ஹ்ருதயத்தளவிலே நிற்குமாகில், சரீரம் எங்குமொக்க ஸுக துக்கங்களை புஜிக்கிறபடி யென்? என்னில்;

16. மணித்யுமணிதீபாதிகள் ஓரிடத்திலே யிருக்க ப்ரபை எங்குமொக்க வ்யாபிக்குமாபோலே, ஜ்ஞாநம் எங்குமொக்க வ்யாபிக்கையாலே அவற்றை புஜிக்கத் தட்டில்லை.

17. ஒருவன் ஏககாலத்திலே அநேக தேஹங்களைப் பரிக்ரஹிக்கிறதும் ஜ்ஞாந வ்யாப்தியாலே.

18. அவ்யக்தமாகையாவது - கடபடாதிகளை க்ரஹிக்கிற சக்ஷுராதிகளால் தோற்று திருக்கை.

19. அசிந்த்யமாகையாவது - அசித்தோடு ஸஜாதீய மென்று நினைக்கவொண்ணு திருக்கை.

---

15.17. ஆத்ம வஸ்து அணுபரிமாணமுடையதாய் ஹ்ருதயப்ரதேசத்தில் மட்டும் நின்றுவிடுமாகில் ‘எனக்குக் காலில் நோவு; எனக்குத் தலையில் நோவு; எனக்குக் காலில் ஸுகம். எனக்குத் தலையில் ஸுகம்’ என்றிப்படி காலே பிடித்துத் தலையளவும் சரீரமெங்கு மொக்க ஸுக து:க்கங்களை புஜிக்கிறபடி கூடுமோ ரென்னில், ரத்னம் ஸூர்யன் விளக்கு முதலான சுடர்ப் பொருள்கள் ஒரோ விடங்களிலே இருக்கச் செய்தேயும் அவற்றின் ஒளியானது சுற்றெங்கும் வியாபித்திருப்போலே. ஆத்மா ஹ்ருதயப் பிரதேசத்திலிருக்கச் செய்தேயும் ஆத்மாவின் தர்மமான ஜ்ஞானம் எங்கும் பரம்புகையாலே சரீரமெங்கு மொக்க ஸுக துக்கங்களை புஜிக்கைக்கு ஒரு குறையுமில்லை. * गुणाद्वा आलोकवत्– குணாத் வா ஆலோகவத் * என்கிற ப்ரஹ்ம ஸூத்ரத்தின் ஸ்ரீ பாஷ்யத்திலே இவ்வர்த்தம் ஸப்ரமாணமாகக் காணத்தக்கது. ஒரு சரீரத்தில் ஸுக துக்கங்களை புஜிக்கிறபடிக்கு இங்ஙனே கொண்டாலும் ஸௌபரி போன்ற சிலர் ஏக காலத்திலே அனேக தேஹங்களைப் பரிக்ரஹிப்பது ஜ்ஞான வ்யாப்தியாலன்றிக்கே ஸ்வரூப வ்யாப்தியாலேயாகவேண்டாவோ வென்னில்; அங்கும் ஜ்ஞான வ்யாப்தியைக் கொண்டே நிர்வஹிக்கக் குறையில்லை. ... ... ... (15-14)

18. ஆத்ம ஸ்வரூபம் அவ்யக்தமென்றும் சொல்லிற்று. அவ்யக்தத்வமாது என்னென்னில்; உலகில்காணும் பொருள்களை க்ரஹிக்கின்ற கண் முதலியவற்றால் தோற்று திருக்கைதான் அவ்யக்தத்வமாவது.

“छेदनादियोग्यानि घटपटादीनि वस्तूनि यैः प्रमाणैर्व्यज्यन्ते तैरयमात्मा न व्यज्यत इति अव्यक्तः” என்கிற கீதாபாஷ்ய ஸ்ரீ ஸூக்தியும் இங்கே அநுஸந்தேயம். ‘ஒரு ப்ரமாணத்தாலும் தோற்று திருக்கைதான் அவ்யக்தத்வம்’ என்று சொல்லலாகாதோ வென்னில்’ அங்ஙனம் சொன்னால் வஸ்துவே இல்லையென்றதாகும். முயற்கொம்பு ஆகாசத்தாமரை மலடிமகன் என்பன போலே ஆத்ம ஸ்வரூபமும் துச்சமென்ன வேண்டிவரும். மாநஸஜ்ஞானத்திற்கு விஷயமாமத்தனையல்லது இந்த்ரியஜ்ஞானத்திற்கு விஷயமாமதன்று என்று கொள்க. திருவாய்மொழியில் * சென்று சென்று பரம்பரமாய் * என்று ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிற ஆழ்வாரும் “ஞானம் கடந்ததே” என்று, இந்த்ரியஜ்ஞானத்திற்கு அகோசரமாயிருக்கையையே அருளிச்செய்தாரென்பதும் இங்கு அறியத்தக்கது. ... ... (18)

19. ஆத்மஸ்வரூபத்தை அசிந்த்யமென்றும் சொல்லிற்று. அசிந்த்யமென்பதற்கு நினைக்கவொண்ணுதென்று பொருள். ஒருபடியாலும் நினைக்கவொண்ணுதென்று பொருள் கொள்ளலாகாது, அங்ஙனம் கொண்டால் ஆத்ம ஸ்வரூப விஷயமான ச்ரவணம் மநநம்

